[8th December 1961

THE HON. SRI P. KAKKAN : விரைவில் முயற்சி எடுத்துக் கொள்ளப்படும்.

*Mid-day Meals Scheme*

* 2172 Q.—SRI M. SELVARAJ (on behalf of SRI P. S. SANTHANAM) : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க் கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இந்த மாநிலத்தில் உள்ள ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் ஏழை பிள்ளைகளுக்கு மத்திய பகல் உணவிற்காக என்று 6 நயா பைசா கொடுப்பதை 10 நயா பைசாவாகக் கொடுப்பதற்கு சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI S. M. ANNAMALAI : இப்படி 6 நயா பைசாவை 10 நயா பைசாவாக உயர்த்தாவிட்டாலுங்கூட, பஞ்சாயத்து போர்டுகள் இந்த 4 பைசாவைத் தருவதற்கு முன்வந்தால்--இப்பொழுது பஞ்சாயத்து சட்டத்திலே இதற்கு இடமில்லை--அதற்குண்டான சலுகைகளைத் தருவதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த மூல கேள்வியிலிருந்து இந்த உப கேள்வி எழவில்லை. சர்க்கார் கொடுக்கும் 6 நயா பைசாவை 10 நயா பைசாவாக உயர்த்த முடியுமா என்பது தான் கேள்வி. பஞ்சாயத்துகள் கொடுக்க ஒப்புக்கொண்டாலும், சர்க்கார் கொடுக்கக்கூடிய மான்யத்திலிருந்துதான் அவைகள் கொடுக்கவேண்டியதாக இருக்கும். ஆகவே முழுப் பிரச்னையையும் ஆலோசித்துப் பார்த்துத்தான் ஒரு முடிவுக்கு வர முடியும்.

SRI K. VINAYAKAM : Whereas the Education Department has calculated that for the mid-day meal scheme, excluding leave days in the year, it works out to Rs. 12 per child, in actual practice we have found that within the course of three months in the City of Madras it comes to Rs. 18, would the Government consider the possibility of increasing the contribution, at least for the city students in view of the heavy rise in prices of edible oil, firewood, etc. ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Here we contribute 6 nP. per child. If the school were to work for more number of days and feeding has got to be done for more number of days, for the actual days for which children are fed, the contribution will be given.

SRI T. T. DANIEL : The mid-day meal programme is working satisfactorily in almost all elementary schools. Will the Government extend the scheme to the high schools also by instructing the headmasters concerned to collect only Rs. 3 per pupil per year?

THE HON. SRI C. SUBRAMANIAM : This is a voluntary programme and I think it will have to continue as a voluntary programme for some time to come. In this I am sure voluntary efforts can produce results.